ஸ்ரீ மஹா விஷ்ணுவால் பூஜிக்கப் பெற்ற

# ஸ்ரீ சிவ ஸஹஸ்ரநாமம்

ஸ்ரீ லிங்கபுராணத்தில் உள்ளது



ஸ்ரீ இஷ்ட ஸித்தி விநாயகர் வேதபாராயண ஸபா
சென்னை 600 094

# श्री शिवसहस्रनामस्तोत्रम्

# ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்



வெளியிட்டோர்

ஸ்ரீ இஷ்டசித்தி விநாயகர் வேத பாராயண ஸபை
சூளை மேடு, சென்னை 94

உ

Phone NV 2315

*ஸ்ரீ சந்த்ர மௌளீஸ்வராய நமঃ*
*ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பரை*

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
# ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்
# காஞ்சீபுரம் 631 502

*யாத்ராஸ்தானம்* தேதி: 04.11.1989

தேவர்கள் துந்து முதலான அரக்கர்களால் தாக்கப்பட்டார்கள். அப்போது அவர்கள் தங்களுக்குத் தெரிந்த அஸ்த்ரங்கள், சஸ்த்ரங்கள் எல்லாவற்றையும் பயன்படுத்தினர். பயன் ஏதும் விளையவில்லை. அரக்கர்களுக்கே வெற்றி கிட்டியது. ஆகவே, தாங்கொணாத் துயருற்ற தேவர்கள் தங்கள் துயர் துடைத்துக் காத்தருள வேண்டுமென ஸ்ரீமந் நாராயணனைச் சரணடைந்தார்கள். சிவபெருமானிடமுள்ள ஜலந்தரனை ஸம்ஹரித்ததுமான ஸுதர்சன சக்ரம் ஒன்றால் மட்டுமே அவர்களை ஸம்ஹரிக்க முடியுமென்ற உண்மையை உணர்ந்த ஸ்ரீமந்நாராயணன் பனிபடர் இமயச் சிகரத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து சிவனை வழிபட் முனைந்தார். தாமரைப் பூக்களைக் கொண்டு ஸஹஸ்ர நாம அர்ச்சனை செய்தார். ஒரு பூவை சிவபெருமான் ஒளித்த போது தன் கண்ணையே பிடுங்கி அர்ப்பணித்தார். அதனால் பங்கஜாக்ஷன் என்ற பெயருடன் ஸுதர்சன சக்ரத்தையும் பெற்று தேவர்களுடைய துன்பம் போக்கினார். இந்த விஷயம் லிங்க புராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீமந்நாராயண கிருதமான இந்த சிவ ஸஹஸ்ர நாமத்தை சூளை மேடு இஷ்ட ஸித்தி விநாயக வேத பாராயண சபையினர் வெளியிடுவது அறிந்து மகிழ்கிறோம்.

ஆஸ்திக அன்பர்கள் இந்நூலைப் பாராயணம் செய்து இகபர ச்ரேயஸ்களை அடைவார்களாக.

நாராயண ஸ்ம்ருதி

## TRANSLATION OF MESSAGE FROM SRI MATHAM, KANCHIPURAM

Chandramouleeswaraaya Namaha
Sri Sankara Bhagavadpaadaachaarya Paramparaa
Kancheepuram 631 502

Date: 03.08.1989

Camp

Vedas are the Supreme being manifested as sound. It is therefore, that the chanting of Vedic incantations and also listening to them with devotion and faith purifies both body and mind. This bestows immeasurable benefits on this world. It gives us immense happiness that the members of Sri Ishta Siddhi Vinayakar Veda Parayana Sabha, Choolaimedu, Madras, with this awareness of the aforementioned truth, have decided to conduct this year Ghanaparayanam of Sri Sukla Yajur Veda (Kanwa ascension) from 20.08.1989 to 04.09.1989 (inclusive). This will contribute to the well being of the entire world.

We confer our blessings that all the devotees having faith in the Vedas who have contributed their mite for this sacred task in all possible ways, be the recipients of the grace of Parameswara in the form of Sri Veda.

**NARAYANA SMRUTI**

Sri Chandramouleeswaraaya Namaha

Sri Sankara Bhagavadpaadaachaarya Parampara

Sri Kanchi Kamakoti Peetadhipati Jagadguru

Sri Sankaracharya Swamigal Sreematham Samasthanam

Kancheepuram 631 502

Date: 04.11.1989

Camp

Once when the Devas were attacked by demons like Dundu, they used all the weapons and missiles known to them but in vain. The demons only became victorious. The Devas who thereby became afflicted with unbearable misery sought refuge under Sriman Narayana, beseeching him to dispel their sorrows and to extend protection. Sriman Narayana, realising that these demons could be anhilated only with the Sudarsana Chakra in Siva's possession, which had earlier slayed Jalandhara. Engaged himself in the worship of Siva after installing a Sivalingam in the snow covered peak of the Himalayas. He performed the worship of Siva by chanting His one thousand names offering lotus flowers (with each name). When Siva hid one of the flowers, Narayana plucked his own eye and offered it instead. Thus he got the name Pankajaksha (Lotus Eyed) as also Sudarsana Chakra which he used to dispel the miseries of Devas. This incident finds a mention in the Linga Purana. We are happy that the members of the Ishta Siddhi Vinayakar Veda Parayana Sabha propose to bring out this Siva Sahasranama which had been composed by Lord Narayana himself.

May the devotees attain material and spiritual prosperity by chanting this Sahasra Nama!

**Narayana Smruthi**

**Benefits accruing from Chanting of Sri Siva Sahasranama**

Persons born in the Tamil months of Aippasi, Tai and Maasi are mostly prone to headache, dizziness (Vertigo) and nervous debility owing to transgression against Lord Siva. These can be remedied by chanting of Sri Siva Sahasra Nama. On days of Mahapradosham, monthly Sivaratri as also Mondays and if possible every evening, the chanting is of special benefits, including the attainment of progeny etc.

Source: Skaanda Purana, Upadesa Kanda, Page 644.

by: Brahma Sri Sengalipuram Anantarama Dikshitar.

**GLORY OF SIVANAMA (SIVA'S NAME)**

When the deluge of Kali Yuga has inundated the entire world, the injunctions decreed for the Varnashrama (various stations of life) etc. have become sub-merged. The various methods of worship like meditation have also disappeared. At this juncture, Oh Sivanama, you alone shine with resplendent success for protection of this world.

Source: AKHYA SHASHTI

# INTRODUCTION

With the onset of Kali Yuga, the world in general and our country in particular has been going through turbulent times and present day - life is beset with unimaginable evils, crimes, acts of violence and cruelty, quarrels and feuds at home and outside at all levels. This devastating tendency of the present age can be countered effectively only with the immeasurable compassion of the Supreme Being. Today when the humanity is virtually on the brink of a precipice it is incumbent on each one of us to strain our utmost to beseech and seek the compassion of the Almighty and thus redeem the world.

Realising the crucial importance of guiding the humanity at this critical juncture, His Holiness Jagadguru Paramacharya of Kanchi Kamakoti Pitha who is rightly an ocean of compassion without cause has inspired this Sabha to publish this sacred and unique version of Siva Sahasranama for the benefit of all mankind. It is perhaps impossible to come across any other similar Sahasranama Stotra enshrined in any Puranas, which has been composed and chanted during personal formal worship by one of the Holy Trinity (Trimurthy).

This particular Siva Sahasra Nama Stotra finds a place in chapter 98 of Linga Mahapurana (by Vyasa Rishi) as also in chapter 41 of Soura Purana but with a few variations in the Namas in some places.

This 'Sivasahasranama' contains the names of Rama, Krishna, Navagrahas, Supreme being. Purusha etc. as also certain word combinations of names Verbatim from Vishnu Sahasranama Stotra. Thus indicating that the one Supreme being alone is worshipped in various forms by the devotees.

As all the H.H. Sankaracharyas of Kanchi Kamakoti Pitham have unanimously avowed, the recitation as well as listening to this Siva Sahasranama would dispel discord, intolerance, disharmony, mutual

hatred and misunderstandings, quell violence and ensure peace, love and happiness among family, home, society, country and nations so that it is an infallible and indispensable remedy for all our current maladies. For the benefit of devotees who would like to do the formal Puja chanting, the thousand names, the Namavali has also been appended in both Sanskrit and Tamil. The Tamil meaning of the namas is based on a Sanskrit commentry by Sri Ganesa Ballala, known as SIVATOSHINI and it contains unique interpretations for certain namas.

We the members of the Sabha who undertook this task as directed by the Sankaracharyas of Kanchi Kamakoti Peetham thank Sri. Janakiraman who was responsible for compiling and translating the Stotram and all others who contributed in every way towards the printing and publishing of this sacred text and bearing all the expenditure incidental thereto without whose help this book could not have been published.

It is fervently hoped that every one of those who come across this sacred text will not only chant the namas religiously with utmost devotion and fervour, individually and collectively but also do their best to propagate it in order to extend the benefit to entire humanity.

OM SHANTHI! SHANTHI! SHANTHI!

Sri Ishta Siddhi Vinayagar
Veda Parayana Sabha

15th March 1990
8, First Street
Sankarapuram
Choolaimedu
Madras 94.

ஓம்

# ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம்

## முன்னுரை

இந்த சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் வியாஸ முனிவர் அருளிச் செய்த லிங்க மஹாபுராணத்தில் 98வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ மகா விஷ்ணுவே அசுரர்களின் அட்டகாஸத்திலிருந்தும் கொடிய செயல்களிலிருந்தும் தேவர்களையும் உலகையும் மீட்பதற்காக பரமசிவனிடமிருந்து சுதர்சன சக்கரத்தைப் பெறுவதற்காக இந்த ஆயிரம் நாமாக்களையும் தானே கூறி, ஒவ்வொரு பெயருடனும் ஒரு தாமரைப் பூவினால் பூசித்ததாகவும் ஈசனின் திருவுளத்தால் ஒரு பூ குறைவதைக் கண்டு தயங்காமல் தன் கண்ணையே தாமரைப் பூவுக்குப் பதிலாக அர்ப்பித்து ஈசுவரனை மகிழ்வித்ததாகவும் கூறப்படுகிறது. இந்த ஸந்தர்ப்பத்தில்தான் மகாவிஷ்ணுவுக்கு புண்டரீகாக்ஷன் *(கமலக்கண்ணன்)* என்ற பெயர் கிடைத்ததாகவும் கூறுகிறார்கள். இதே சிவ ஸஹஸ்ர நாமம் ஸௌர புராணத்திலும் 41வது அத்தியாயத்தில் மகாவிஷ்ணு வால் சொல்லப்பட்டதாக உளது. ஆயினும் அதில் பல நாமாக்களில் வேறுபாடுகள் உள்ளன.

ஆனால், உலக வழக்கில் அதிகமாக புழக்கத்தில் இன்னொரு சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம் பிரஸித்தமாக உள்ளது. அந்த ஸஹஸ்ர நாமமும் லிங்க மஹா புராணத்திலேயே 65வது அத்தியாயத்தில் பிரம்மாவினால் முதலில் தண்டிக்குச் சொல்லப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. அதுவே மகாபாரதம் ஆனுசாஸனிக பர்வாவில் 48வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

இந்த இதழில் உள்ள ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தை மகாவிஷ்ணுவே அருளிச் செய்ததால் இதற்கு மிக்க விசேஷம். தவிரவும் உலகத்தின் வெவ்வேறு பாகங்களிலும், நம் பாரத தேசத்தின் பல பாகங்களிலும் சமீப காலமாக ஏராளமான கொலைகள், வன்முறைகள் முதலிய கொடிய செயல்களினாலும், பயங்கரவாதிகளின் அட்டகாஸத்தினாலும், ஜனங்களுக்கு நிறைய

கஷ்டங்களும் தொல்லைகளும் மலிந்து உள்ளன. இம்மாதிரி காலத்தில் கஷ்டங்கள் நீங்கி லோக க்ஷேமத்தை நிலைநாட்டுவதற்கு இந்த ஸஹஸ்ர நாமத்தை எல்லோரும் படித்து பாராயணம் செய்து எங்கும் பிரசாரம் செய்வது மிக்க அவசியம் என்று காஞ்சி காமகோடி பீடத்தின் ஜகத் குருவான பரமாச் சாரியர்களின் திருவாக்கு எனத் தெரிய வருகிறது. தவிரவும் வீடுகளிலும், அலுவலகங்களிலும், கடை கண்ணிகளிலும், எல்லாவிடங்களிலுமே சகிப்புத் தன்மை குறைந்து, தந்தை மகன், கணவன் மனைவி, சகோதரர்கள், உறவினர்கள், நண்பர்கள் இவர்களிடமும் ஒருவருக்கொருவர் கோபம், துவேஷம், கொடுமை இவைகள் அதிகமாகி வருவதைப் பார்க்கிறோம். ஆகையின் உள்ளிலும் வெளியிலும், நம் தேசத்திலும், எல்லா தேசங்களிலும் வன்முறை, துவேஷம், கொடிய செயல்கள் அறவே நீங்கி எங்கும் ஸந்தோஷம், சாந்தி, அமைதி நிலவ இந்த ஸஹஸ்ர நாமம் இன்றியமையாதது. ஸ்ரீமத் பாகவத மஹா புராணத்தில் ஸ்கந்தம் 4வது அத்தியாயம் 14வது ச்லோகம்) 'சிவ' என்ற ஈரெழுத்துள்ள நாமாவை ஒரு தடவை உச்சரித்தாலே பாவங்கள் அனைத்தும் அழிகின்றன என்று கூறப்படுகிறது. ''यद् द्व्यक्षरं नाम गिरेरितं नृणां, सकृत्प्रसङ्गादघमाशु हन्ति यत्'' । ஸ்ரீ மகாவிஷ்ணுவே கூறிய ஆயிரம் நாமாக்களையும் சொல்லிப் பூசித்தால் அதனாலாய பயன் என்னவென்று கூறவும் வேண்டுமோ!

இந்த சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தின் இன்னொரு முக்கிய விசேடம் என்னவென்றால், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தில் வரும் பல நாமாக்களின் தொடர்கள் அப்படியே இந்த ஸஹஸ்ர நாமத்திலும் வருகின்றன. பகவானுடைய சிவலிங்க வடிவின் அடிப்பாகத்தில் பிரமனும் நடுப் பாகத்தில் விஷ்ணுவும், மேலே ருத்ர மூர்த்தியான பரமசிவனும் இருப்பதாகக் கூறப்படுகிறது. ''मूले ब्रह्मा वसति भगवान्मध्यभागे च विष्णुः सर्वेशानः पशुपतिरजो रुद्रमूर्तिरेण्यः''

நிர்க்குண நிராகரரான பரம் பிரும்மம் எனக் கூறப்படும் பரம் பொருள்தான் சிவனாகவும், விஷ்ணுவாகவும், அவரவர்களின் மன விருப்பத்திற்கு ஏற்றவாறு மற்ற தேவர்களின் உருவிலும் பூசிக்கப்படுகிறது

என்பதை நன்கு அறிவுறுத்தவே இந்த சிவ ஸஹஸ்ர நாமாவில் பரமசிவனுக்கு விஷ்ணு, கிருஷ்ணன், பரம் பிரும்மம், புருஷன், சூரியன், சந்திரன், கேது, செவ்வாய், புதன் என்றெல்லாம் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

இந்த சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்திலுள்ள நாமாக்களுக்கு 'கணேச பல்லாளர்' என்ற பெரியோர் எழுதிய 'சிவதோஷிணி' என்ற உரையை ஒட்டி தமிழில் சுருக்கமாக பொருள் விளக்கப்பட்டுள்ளது. ''शाब्दब्रह्म सुदुर्बोधं मनोवाचामगोचरम्'' என்று ஸ்ரீமத் பாகவதத்தில் கூறியுள்ளபடி ஈசுவரனின் சப்த வடிவமான பகவன் நாமாக்களுக்குப் பொருள் சுலபமாக மனதினால் அறியக் கூடியதோ, சொல்லினால் விளக்கக் கூடியதோ அல்ல.

இந்த ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தை ஒவ்வொருவரும் தானும் பாராயணம் செய்து எங்கும் பரவவும் செய்து, எல்லா மங்களங்களையும் பெறுவதுடன், லோக க்ஷேமத்திற்கும் காரணமாகி, ஈசனின் பூர்ண அனுக்கிரஹத்திற்குப் பாத்திரமாக ஆகுவோமாக.

## ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாம பாராயண பலன்

ஐப்பசி, தை, மாசி இந்த மாதங்களில் பிறந்தவர்களுக்குப் பெரும்பாலும் சிவாபசாரத்தால் தலை வலி, தலை சுற்றல், நரம்புத் தளர்ச்சி இவை இருக்கக் கூடும். ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாம பாராயணம் செய்தால் இவை நீங்கும். மஹாபிரதோஷம், மாத சிவராத்திரி, சோம வாரம், முடிந்தால் பிரதி தினம் மாலையிலும் படிப்பது விசேஷம். புத்ர லாபம் முதலிய க்ஷேமங்கள் ஏற்படும்.

ஆதாரம் : பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம்
அனந்தராம தீக்ஷிதர் பதிப்பித்த
ஸ்காந்த புராணம்
உபதேச காண்டம் பக்கம் 644

## ஸ்ரீ சிவ நாம மஹிமை

கலிகாலமானது தன்னுடைய வெள்ளத்தினால் இவ்வுலகனைத்தையும் வ்யாபித்துக் கொள்ளும் போது வர்ணாஸ்ரமாதி தர்மங்கள் யாவும் மூழ்கி விட்டன. த்யானம் முதலிய வழிபாட்டு முறைகளும் மறைந்து விட்டன. இது நன்கு விளங்குகிறது. இந்த நிலையில், ஹே சிவ நாமாவே, இந்த உலகத்தைக் காக்க நீ ஒருத்திதான் வெற்றியுடன் விளங்குகிறாய்.

திருவிசநல்லூர் ஸ்ரீதர வேங்கடேச அய்யாவாள்
அருளிய ஆக்யா ஷஷ்டி

ओं

ஓம்

# श्री शिवसहस्रनामस्तोत्रम्

## ஶ்ரீ சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்

अस्य श्रीशिवसहस्रनामस्तोत्रमहामन्त्रस्य । श्रीविष्णुः ऋषिः । अनुष्टुप् छन्दः । परमात्मा श्री शंकरो देवता ।

ध्यानम्

मूले कल्पद्रुमस्य द्रुतकनकनिभं चारुपद्मासन स्थं
वामाङ्कारूढगौरीनिबिडकुचभराभोगगाढोपगूढम् ।
नानालंकारकान्तं मृगपरशुवराभीतिहस्तं त्रिनेत्रं
वन्दे बालेन्दुमौलिं गजवदनगुहाश्लिष्टपार्श्वं महेशम् ॥

அஸ்ய ஶ்ரீ ஶிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய । ஶ்ரீ விஷ்ணுః ருஷிঃ । அநுஷ்டுப் ச2ந்தঃ । பரமாத்மா ஶ்ரீ ஶங்கரோ தே3வதா।

த்யானம்

மூலே கல்பத்3ருமஸ்ய த்3ருதகனகநிப4ம் சாருபத்3மாஸனஸ்த2ம்
வாமாங்காரூட4 கௌ3ரீநி பிடகுச ப4ராபோ4க3கா3டோ4பகூட4ம்।
நாநாலங்காரகாந்தம் ம்ருக3பரஶுவராபீ4திஹஸ்தம் த்ரிநேத்ரம்
வந்தே3 பா3லேந்து மௌளிம் க3ஜவத3நகு3ஹாஶ்லிஷ்டபார்ஶ்வம் மஹேஶம் ॥

பொருள்

கற்பக மரத்தின் கீழே, உருக்கிய பொன் போன்றவரும், அழகிய பத்மாஸனத்தில் வீற்றிருப்பவரும், இடது மடியில் ஏறி அமர்ந்துள்ள பார்வதியின் நெருக்கமான ஸ்தனங்களால் நிரம்பிய மார்புப் பிரதேசத்தால் நன்கு மறைக்கப்பட்டவரும், பற்பல ஆபரணங்களினால் சோபிக்கின்றவரும், மான், மழு, வரம், அபயம் இவை கூடிய கைகளையுடையவரும், முக்கண் படைத்தவரும், இளமதியை தலையில் தரித்தவரும், விநாயகர், கந்தன் இருவராலும் இரு பக்கங்களிலும் தழுவப்பட்டவருமான சிவபெருமானை வணங்குகிறேன்.

ॐ

# श्री शिवसहस्रनामस्तोत्रम्

## ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்

भवः शिवः हरो रुद्रः पुरुषः पद्मलोचनः ।
अर्थितव्यः सदाचारः सर्वशम्भुमहेश्वरः ॥ १ ॥

ईश्वरः स्थाणुरीशानो सहस्राक्षः सहस्रपात् ।
वरीयन् वरदो वन्द्यः शङ्करः परमेश्वरः ॥ २ ॥

गङ्गाधरः शूलधरः परार्थैकप्रयोजनः ।
सर्वज्ञः सर्वदेवादिगिरिधन्वा जटाधरः ॥ ३ ॥

ப4வः ஶிவः ஹரோ ருத்3ரः புருஷः பத்3மலோசநः ।
அர்த்தி2தவ்யः ஸதா3சாரः ஸர்வஶம்பு4மஹேஶ்வரः ॥ 1 ॥

ஈஶ்வரः ஸ்தா2ணுரீஶாநோ ஸஹஸ்ராக்ஷः ஸஹஸ்ரபாத் ।
வரீயான் வரதோ3 வந்த்3யः ஶங்கரः பரமேஶ்வரः ॥ 2 ॥

க3ங்கா3த4ரः ஶூலத4ரः பரார்த்தை2க ப்ரயோஜனः ।
ஸர்வக்ஞः ஸர்வதே3வாதி3கி3ரித4ன்வா ஜடாத4ரः ॥ 3 ॥

1. உலகின் உற்பத்திக்குக் காரணமான சச்சிதானந்த ரூபமான கடவுள், உலகை ஸம்ஹாரம் செய்து சம்சார துக்கத்தை நீக்குபவர், மகாவிஷ்ணு ரூபமான ஆதி புருஷர், சூரிய வடிவானவர், வேண்டுவதற்குத் தகுதி பொருந்தியவர் *(விநாயகர் வடிவானவர்)*, பிரகிருதி ரூபமான சக்தி வடிவினர், ருத்ரர்களின் பூசிக்கத் தக்க தலைவர்.

2. சக்தி வாய்ந்தவர், நிலையாக இருப்பவர், எல்லா வித்தை*(கல்வி)* களுக்கும் பிரபு, கணக்கிலா கண்களும் கால்களும் உடையவர், மிகச் சிறந்தவர், வேண்டியதைக் கொடுத்தருள்பவர், பூசிப்பதற்குத் தகுதி யுள்ளவர், இவ்வுலகில் நன்மை கொடுப்பவர், எல்லோருக்கும் மேலான ஈசுவரர்.

3. கங்கையைத் தரிப்பவர், சூலத்தைத் தரிப்பவர், பக்தரின் நலனையே ஒரே குறிக்கோளாகக் கொண்டவர், எல்லாம் அறிந்தவர், மகாவிஷ்ணு வின் உருவான மேரு மலையை வில்லாகக் கொண்டவர், சடை முடியார்.

चन्द्रापीडः चन्द्रमौलिः विद्वान्विश्वामरेश्वरः ।
वेदान्तसारसन्दोहः कपाली नीललोहितः ॥ ४ ॥

ध्यानाधारः अपरिच्छेद्यः गौरीभर्ता गणेश्वरः ।
अष्टमूर्तिः विश्वमूर्तिः त्रिवर्गः स्वर्गसाधनः ॥ ५ ॥

ज्ञानगम्यः दृढप्रज्ञः देवदेवः त्रिलोचनः ।
वामदेवो महादेवो पाण्डुः परिदृढोऽदृढः ॥ ६ ॥

சந்த்3ராபீட3: சந்த்3ரமௌளி: வித்3வான்விஸ்வாமரேஸ்வர: ।
வேதா3ந்தஸாரஸந்தோ3ஹ: கபாலீ நீலலோஹித: ॥ 4 ॥

த்4யானாதார: அபரிச்சே2த்3ய: கௌ3ரீப4ர்தா க3ணேஸ்வர: ।
அஷ்டமூர்த்தி: விஸ்வமூர்த்தி: த்ரிவர்க3: ஸ்வர்க3ஸாத4ன: ॥ 5 ॥

க்ஞானக3ம்ய: த்3ருட4ப்ரக்ஞ: தே3வதே3வ: த்ரிலோசன: ।
வாமதே3வோ மஹாதே3வோ பாண்டு3: பரித்3ருடோ4ऽத்3ருட4: ॥ 6 ॥

4. *சந்திரனை முடியணியாகத் தரித்தவர், சந்திரனைத் தலையில் தரித்தவர், அறிவு படைத்தவர், உலகிற்கும் தேவர்கட்கும் தலைவர், வேதாந்த மனைத்தின் ஸாரத்தில் நிறைந்தவர், மண்டையோடு தாங்கிய ருத்ரரின் வடிவானவர்.*

5. *தியானத்திற்கு ஆதாரமாக இருப்பவர், தேசம் காலம் இவற்றின் பாகுபாடு அற்றவர், பார்வதியின் கணவர், 25 தத்துவங்களின் தலைவர், சூரியன் முதலிய எட்டு உருவங்களைக் கொண்டவர், உலகத்தை தன் வடிவாகக் கொண்டவர். தர்மம் அர்த்தம் காமம் என்ற புருஷார்த் தங்களாக இருப்பவர், சுவர்க்கத்தை அடைய சாதனமாகியுள்ளவர்.*

6. *ஞானத்தினால் அடையக் கூடிய முக்தியின் உருவானவர், உறுதியான புத்தியுடையவர், தேவர்கட்கெல்லாம் தேவர், முக்கண்ணர், வாம தேவராகத் தோன்றியவர், தேவர்களில் சிறந்தவர், வெண்மை நிறமுடை யவர், வலிமை வாய்ந்தவர், மகாவிஷ்ணுவுக்கு வலிமையளித்தவர்.*

विश्वरूपो विरूपाक्षः वागीशः शुचिरन्तरः ।
सर्वप्रणयसंवादी वृषाङ्को वृषवाहनः ॥ ७ ॥

ईशः पिनाकी खट्वाङ्गी चित्रवेषः चिरंतनः ।
तमोहरो महायोगी गोप्ता ब्रह्माङ्गहृत्जटी ॥ ८॥

कालकालः कृत्तिवासाः सुभगः प्रणवात्मकः ।
उन्मत्तवेषः चक्षुष्यः दुर्वासाः स्मरशासनः ॥ ९ ॥

விஶ்வரூபோ விரூபாக்ஷ꞉ வாகீ$^3$ஶ꞉ ஶுசிரந்தர꞉ ।
ஸர்வப்ரணஸம்வாதீ$^3$ வ்ருஷாங்கோ வ்ருஷவாஹன꞉ ॥ 7 ॥

ஈஶ꞉ பினாகீ க$^2$ட்வாங்கீ$^3$ சித்ரவேஷ꞉ சிரந்தன꞉ ।
தமோஹரோ மஹாயோகீ$^3$ கோ$^3$ப்தா ப்$^3$ரஹ்மாங்க$^3$ஹ்ருத்ஜடீ ॥ 8 ॥

காலகால꞉ க்ருத்திவாஸா꞉ ஸுப$^4$க$^3$꞉ ப்ரணவாத்மக꞉ ।
உன்மத்தவேஷ꞉ சக்ஷுஷ்ய꞉ து$^3$ர்வாஸா꞉ ஸ்மரஶாஸன꞉ ॥ 9 ॥

7. உலக உருவில் புகழ் பெற்றவர், சூரியன், சந்திரன் அக்னியாகிற பல உருக் கொண்ட கண்களை உடையவர், சொல்லின் *(வாக்கு)* அதிபதி, பரிசுத்தமாக்குபவர், யாவருக்கும் முடிவு வடிவானவர், எல்லா நீதி சாஸ்திரங்களையும் அறிந்தவர், காளையை *(நந்தியை)* அடையாளமாகக் கொண்டவர், காளை வாகனத்தோர்.

8. யாவரையும் அடக்குபவர், பினாகம் என்ற வில்லைத் தாங்குபவர், கட்வாங்கம் என்ற தடி போன்ற ஆயுதத்தைத் தரித்தவர், பலவித வேடங்கள் புனைபவர், மிகப் பழமையானவர் *(உலகத்தை விஸ்தரிப்பவர்)*, அக்ஞானமாகிற இருளைப் போக்குபவர், மனவடக்கம் நிறைந்த யோகிகளில் சிறந்தவர், காப்பாற்றுபவர், பிரம்மனின் தலையைக் கொய்த சடையர்.

9. காலனை வென்றவர், நரஸிம்மரின் தோலை அணிந்தவர், எல்லா ஐச்வரியம், மேன்மை அளிப்பவர், ஓங்கார உருவினர், தத்தாத்ரேயரின் உருவானவர், அத்ரியின் கண்ணிலிருந்து சந்திரனாக அவதரித்தவர், துர்வாஸர், மன்மதனை வென்றவர்.

दृढायुधः स्कन्दगुरुः परमेष्ठी परायणः ।
अनादिमध्यनिधनः गिरिशः गिरिबान्धवः ॥ १० ॥

कुबेरबन्धुः श्रीकण्ठः लोकवर्णोत्तमोत्तमः ।
सामान्यदेवः कोदण्डी नीलकण्ठः परश्वधी ॥ ११ ॥

विशालाक्षो मृगव्याधः सुरेशः सूर्यतापनः ।
धर्मकर्माक्षमः क्षेत्रं भगवान् भगनेत्रभित् ॥ १२ ॥

த்3ருடா4யுத4ஃ ஸ்கந்த3கு3ருஃ பரமேஷ்டீ2 பராயணஃ ।
அநாதி3மத்4யநித4னஃ கி3ரிஶஃ கிரிபா3ந்த4வஃ ॥ 10 ॥

குபே3ரப3ந்து4ஃ ஶ்ரீகண்ட2ஃ லோகவர்ணோத்தமோத்தமஃ ।
ஸாமான்யதே3வஃ கோத3ண்டீ3 நீலகண்ட2ஃ பரஶ்வதீ4 ॥ 11 ॥

விஶாலாக்ஷோ ம்ருக3வ்யாத4ஃ ஸுரேஶஃ ஸூர்யதாபனஃ ।
த4ர்மகர்மாக்ஷமஃ க்ஷேத்ரம் ப4க3வான் ப4க3நேத்ரபி4த் ॥ 12 ॥

10. *உறுதியான ஆயுதம் படைத்தவர், கந்தனின் குரு, பிரும்மாவின் உருவில் ஸத்ய லோகத்தை இருப்பிடமாகக் கொண்டவர், பிறப்பு, நடுநிலை, இறப்பு இவையில்லாதவர், கைலயங்கிரியில் உறைபவர், இமாலயத்தின் மருமகனாவார்.*

11. *குபேரனின் உறவினர், லக்ஷ்மி(செல்வம்)யை அருகில் வைத்திருப்பவர், பிராமணர்களால் பூசிக்கப்பட்டவர், கறுத்த கழுத்துடையவர், கோடரி தாங்கியவர்.*

12. *அகன்ற கண்களையுடையவர், மானுருவம் கொண்ட பிரும்மாவை வேட்டையாடுகிறவர், தேவர்களின் நாயகர், சூரியனுக்கு ஒளி கொடுப்பவர், தருமச் செயல்களால் அடைய முடியாதவர், க்ஷேத்ரம் எனப்படும் பிராணிகளின் சரீரமாக இருந்து கொண்டு விஷ்ணு உருவிலும் இருப்பவர். தக்ஷ யாகத்தில் சூரியனின் கண்ணைப் பறித்தவராகி இருந்து கொண்டு—*

उग्रः पशुपतिः तार्क्ष्यप्रियभक्तः प्रियंवदः ।
दांतोदयाकरो दक्षः कपर्दी कामशासनः ॥ १३ ॥

श्मशाननिलयः सूक्ष्मः श्मशानस्थः महेश्वरः ।
लोककर्ता भूतपतिः महाकर्ता महौषधी ॥ १४ ॥

उत्तरः गोपतिः गोप्ता ज्ञानगम्यः पुरातनः ।
नीतिः सुनीतिः शुद्धात्मा सोमसोमरतः सुखी ॥ १५ ॥

உக்[3]ரஃ பஶுபதிஃ தார்க்ஷ்யப்ரியப[4]க்தஃ ப்ரியம்வத[3]ஃ ।
தா[3]ந்தோத[3]யாகரோ த[3]க்ஷஃ கபர்தீ[3] காமஶாஸநஃ ॥ 13 ॥

ஶ்மஶாநநிலயஃ ஸூக்ஷ்மஃ ஶ்மஶாநஸ்த[2]ஃ மஹேஶ்வரஃ ।
லோககர்தா பூ[4]தபதிஃ மஹாகர்தா மஹௌஷதீ[4] ॥ 14 ॥

உத்தரஃ கோ[3]பதிஃ கோ[3]ப்தா க்ஞானக[3]ம்யஃ புராதனஃ ।
நீதிஃ ஸுநீதிஃ ஶுத்[3]தா[4]த்மா ஸோமஸோமரதஃ ஸுகீ[2] ॥ 15 ॥

13. *பயங்கர தோற்றமுடையவர், ஜீவராசிகளின் நாயகர், பாபங்களாகிற பாம்பை அழிக்க வல்ல கருடனுக்குப் பிரியமான மகாவிஷ்ணுவைப் பக்தராகக் கொண்டவர், தன் ரகசியத்தையும் கூறுபவர், புலனடக்கியவர்களின் ஞான உதயத்திற்குப் பொறுப்பானவர், திறமையுடன் செயல்படுபவர், சடைமுடி கொண்டவர், சுதந்திரமானவர்.*

14. *சுஷும்னா என்ற நாடியில் குடிகொண்டு நுண்ணிய வடிவுள்ளவர், காசியில் இருப்பவர், சிறந்த ஈசுரவர், உலகத்தைச் செய்பவர், ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களின் தலைவர், யாவற்றையும் உற்பத்தி செய்பவர், கரையேற்றுவதற்கு வேண்டிய ஞானம் உள்ளவர்.*

15. *சம்சாரக் கடலிலிருந்து கரை சேர்ப்பவர், வேதங்களாகிய பசுக்களைக் காப்பவர், யாவரையும் காப்பவர், ஆன்ம அறிவால் உணரத் தக்கவர், தொன்மையானவர், நல்வழியாக உள்ளவர், நல்ல பகுத்தறிவு தருபவர், தூய அந்தக் கரணத்தை அளிப்பவர், உமையுடன் இருந்து கொண்டு சந்திரனிடம் ஈடுபாடு கொண்டவர், நித்திய சுகமுடையவர்.*

**सोमपः अमृतपः सोमः महानीतिर्महामतिः ।**
**अज्ञातशत्रुः अलोकः सम्भाव्यः हव्यवाहनः ॥ १६ ॥**

**लोककारो वेदकारः सूत्रकारः सनातनः ।**
**महर्षिः कपिलाचार्यः विश्वदीप्तिः त्रिलोचनः ॥ १७ ॥**

**पिनाकपाणिः भूदेवःस्वस्तिदः स्वस्तिकृत्सदा ।**
**त्रिधामा सौभगः शर्वः सर्वज्ञः सर्वगोचरः ॥ १८ ॥**

ஸோமப: அம்ருதப: ஸோம: மஹாநீதிர்மஹாமதி: ।
அக்ஞாதஶத்ரு: அலோக: ஸம்பா$^4$வ்ய: ஹவ்யவாஹன: ॥ 16 ॥

லோககாரோ வேத$^3$கார: ஸூத்ரகார: ஸனாதன: ।
மஹர்ஷி: கபிலாசார்ய: விஶ்வதீ$^3$ப்தி: த்ரிலோசன: ॥ 17 ॥

பினாகபாணி: பூ$^4$தே$^2$வ:ஸ்வஸ்தித$^3$: ஸ்வஸ்திக்ருத்ஸதா$^3$ ।
த்ரிதா$^4$மா ஸௌப$^4$க$^3$: ஶர்வ: ஸர்வக்ஞ: ஸர்வகோ$^3$சர: ॥ 18 ॥

16. ஸோமத்தை அருந்துபவர், அமுது அருந்துபவர், ஸோமம் என்ற கொடியானவர், பெரும் செல்வங்களை அளிப்பவர், பெரும் புத்தி யளிப்பவர், எதிரிகளற்றவர், ஒளி வடிவாகி மதிப்புக்குரியவர். அக்னியின் உருவானவர்.

17. உலகைப் படைத்தவர், வேதத்தை உண்டு பண்ணியவர், பிரும்ம சூத்ரம் முதலியவற்றை இயற்றியவர், ஸனாதனர் என்ற ரிஷியானவர், ஸாங்கிய ஆசாரியரான கபில மஹர்ஷி, உலகத்திற்கு ஒளி கொடுப்பவர், மூவுலகை யும் பார்ப்பவர்.

18. பினாகம் என்ற வில்லை ஏந்தியவர், பூர் என்ற உலகில் லீலை செய்பவர், மங்களம் வழங்குபவர், மங்களமே செய்பவர், பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூன்று தேஜஸ்ஸுகளுக்கும் உற்பத்தி ஸ்தானமானவர், சௌபகம் என்ற விமானத்தை சால்வனுக்கு அளித்தவர், எல்லாம் அறிந்த ருத்ர கணங்களானவர், யாவற்றையும் அறிந்தவர், யாவற்றையும் பார்ப்பவர்.

ब्रह्मधृक् विश्वसृक् स्वर्गः कर्णिकारः प्रियः कविः ।
शाखः विशाखः गोशाखः शिवोनैकः क्रतुः समः ॥ १९ ॥

गङ्गाप्लवोदकः भावः सकलः स्थपतिस्थिरः ।
विजितात्मा विधेयात्मा भूतवाहनसारथिः ॥ २० ॥

सगणो गणकार्यश्च सुकीर्तिः छिन्नसंशयः ।
कामदेवः कामपालः भस्मोद्धूलित विग्रहः ॥ २१ ॥

ப்$^{3}$ரஹ்மத்$^{4}$ருக் விஶ்வஸ்ருக் ஸ்வர்க$^{3}$ꞏ கர்ணிகாரꞏ ப்ரியꞏ கவிꞏ ।
ஶாக$^{2}$ꞏ விஶாக$^{2}$ꞏ கோ$^{3}$ஶாக$^{2}$ꞏ ஶிவோநைகꞏ க்ரதுꞏ ஸமꞏ ॥ 19 ॥

க$^{3}$ங்கா$^{3}$ப்லவோத$^{3}$கꞏ பா$^{4}$வꞏ ஸகலꞏ ஸ்தபதிஸ்தி$^{2}$ரꞏ ।
விஜிதாத்மா விதே$^{4}$யாத்மா பூ$^{4}$தவாஹனஸாரதி$^{2}$ꞏ ॥ 20 ॥

ஸக$^{3}$ணோ க$^{3}$ணகார்யஶ்ச ஸுகீர்த்திꞏ சி$^{2}$ன்னஸம்ஶயꞏ ।
காமதே$^{3}$வꞏ காமபாலꞏ ப$^{4}$ஸ்மோத்$^{3}$தூ$^{4}$லித விக்$^{3}$ரஹꞏ ॥ 21 ॥

19. பிரும்ம நிஷ்டர்களின் ஸ்வர்க்கமான பிரும்ம லோகத்தை ஸ்ருஷ்டி செய்தவர், கர்ணிகார மரமானவர் *(அல்லது அல்லிப் பூவானவர்)*, ஆத்ம ஸ்வரூபம் ஆனதால் யாவருக்கும் பிடித்தவர், வால்மீகி கவியானவர், சாகர் என்ற பெயர் கொண்ட கந்தனின் வடிவானவர், பலவாறான வேதங் களுக்குக் காரணமானவர், மோக்ஷப் பேறு அளிப்பவர், இவரை விட வேறு ஒரே பொருள் இல்லாதவர் *(ஒரே பொருளாக இருக்கும் தனிச் சிறப்பு வாய்ந்தவர்)*, வேள்வியின் வடிவானவர், யாவருடனும் சமமாக இருப்பவர்.

20. கரையேற்றும் கங்கை நீருக்கு இருப்பிடம், மோக்ஷம் அளிப்பவர், சந்திர கலையுடன் கூடியவர், ஸ்திரமாக மாயையை உண்டு பண்ணுபவர், மனதை அடக்கியவர், வேதத்தினால் விளங்கப்படும் உருவமுடையவர், பிரும்மாவை தேரோட்டியாகக் கொண்டவர்.

21. பிரமத கணங்களுடன் இருப்பவர், 25 தத்துவங்கள் கொண்ட பிரும்மாண்டத்தைப் படைத்தவர், பக்தர்களுக்குத் தற்பெருமை தருபவர், ஐயங்களை நீக்குபவர், மன்மதனாக இருப்பவர், மன்மதனைக் காப்பவர், சாம்பல் பூசப்பட்ட உருவம் கொண்டவர்.

भस्मप्रियः भस्मशायी कामी कान्तः कृतागमः ।
समायुक्तो निवृत्तात्मा धर्मयुक्तः सदाशिवः ॥ २२ ॥

चतुर्मुखः चतुर्बाहुः दुरावासो दुरासदः ।
दुर्गमो दुर्लभो दुर्गः सर्वायुधविशारदः ॥ २३ ॥

अध्यात्मयोगनिलयः सुतन्तुः तन्तुवर्धनः ।
शुभाङ्गः लोकसारङ्गः जगदीशः अमृताशनः ॥ २४ ॥

ப4ஸ்மப்ரியஃ ப4ஸ்மஶாயீ காமி காந்தஃ க்ருதாக3மஃ ।
ஸமாயுக்தோ நிவ்ருத்தாத்மா த4ர்மயுக்தஃ ஸதா3ஶிவஃ ॥ 22 ॥

சதுர்முக2ஃ சதுர்பா3ஹுஃ து3ராவாஸோ து3ராஸத3ஃ ।
து3ர்க3மோ து3ர்லபோ4 து3ர்க3ஃ ஸர்வாயுத4விஶாரத3ஃ ॥ 23 ॥

அத்4யாத்மயோக3நிலயஃ ஸுதந்துஃ தந்துவர்த்த4னஃ ।
ஶுபா4ங்க3ஃ லோகஸாரங்க3ஃ ஜக3தீ3ஶஃ அம்ருதாஶனஃ ॥ 24 ॥

22. *சாம்பலை விரும்புபவர், சாம்பலை உறைவிடமாகக் கொண்டவர், யாவரின் மனதையும் ஈர்ப்பதால் அழகானவர், வேதங்களைத் தோற்று வித்தவர், பிரகிருதி(லக்ஷ்மி)யுடன் கூடிய மகாவிஷ்ணுவுடன் இருப்பவர், மனத்திற்கு அப்பாற்பட்டவர், தர்மத்துடன் கூடியவர், எப்பொழுதும் மங்களமானவர்.*

23. *நான்கு கைகள் கொண்ட பிரும்மாவின் வடிவானவர், எளிதில் உள்ளத்தில் பதியாதவர், எளிதில் அணுக முடியாதவர், எளிதில் உணர முடியாதவர், எளிதில் கிட்டாததால் மிக முயற்சி செய்து அடையக் கூடியவர், எல்லா ஆயுதங்களிலும் வல்லவர்களான பரசுராமர் போன்றவர்களுக்குக் காரணமானவர்.*

24. *நிர்விகல்ப ஸமாதி நிலையை உறைவிடமாகக் கொண்டவர், நல்ல சந்ததியுடையவர், சந்ததியில் விரிவடையும் உலகை வளர்ப்பவர், மங்கள வடிவமைப்பு பொருந்தியவர், உலகின் பக்தி ரஸத்தைப் பெறுபவர் (அல்லது உலகை விளையாட்டுக் கருவியாகக் கொண்டவர்), உலகின் தலைவர், யாகத்தில் மீந்தவற்றை உண்பவர்.*

भस्मशुद्धिकरो मेरुः ओजस्वी शुद्धविग्रहः ।
हिरण्यरेताः तरणिः मरीचिर्महिमालयः ॥ २५ ॥

महाह्रदः महागर्भः सिद्धवृन्दारवन्दितः ।
व्याघ्रचर्मधरः व्याली महाभूतो महानिधिः ॥ २६ ॥

अमृताङ्गः अमृतवपुः पञ्चयज्ञः प्रभञ्जनः ।
पञ्चविंशतितत्त्वज्ञः पारिजातः परावरः ॥ २७ ॥

ப4ஸ்மஶுத்3தி4கரோ மேருஃ ஓஜஸ்வீ ஶுத்3த4விக்3ரஹஃ ।
ஹிரண்யரேதாஃ தரணிஃ மரீசிர்மஹிமாலயஃ ॥ 25 ॥

மஹாஹ்ருத3ஃ மஹாக3ர்ப4ஃ ஸித்3த4வ்ருந்தா3ரவந்தி3தஃ ।
வ்யாக்4ரசர்மத4ரஃ வ்யாலீ மஹாப்4ருதோ மஹாநிதி4ஃ ॥ 26 ॥

அம்ருதாங்க3ஃ அம்ருதவபுஃ பஞ்சயக்ஞஃ ப்ரப4ஞ்ஜனஃ ।
பஞ்சவிம்ஶதி தத்வக்ஞஃ பாரிஜாதஃ பராவரஃ ॥ 27 ॥

25. *சாம்பலினால் பரிசுத்தமாக்குபவர், மேரு மலையானவர், ஆன்ம பலத்தினால் தூய வடிவுள்ளவர், செல்வத்தை வீர்யமாகக் கொண்டவர், சம்ஸாரத்திற்கு தோணி போன்று சூரிய வடிவானவர், மகிமாஸித்தியின் உறைவிடம்.*

26. *யோகிகளின் ஞானக்கடலின் இருப்பிடம், மகத்துவத்தைக் கருவில் கொண்டவர், சித்தர்களாலும் தேவர்களாலும் வணங்கப்படுபவர், புலித் தோல் உடுத்தவர், வாசுகி போன்ற பாம்புகளை அணிகளாகக் கொண்டவர், விராட் என்னும் பிரமனுக்குக் காரணமானவர், பெருஞ் செல்வங்களின் பொக்கிஷம்.*

27. *அழியா உறுப்புகள் கொண்டவர், பொன்னிற மேனியார், ஐந்து வகையான நித்ய வேள்வி (யக்ஞம்) உடையவர், மாயையை ஒழிப்பவர், 25 தத்துவங்களையும் கற்பிப்பவர், கற்பக மரமானவர், பரம்பொருளாக வும் உலகாகவும் இருப்பவர்.*

सुलभः सुव्रतः शूरः वाङ्मयैकनिधिर्निधिः ।
वर्णाश्रमगुरुर्वर्णी शत्रुजित् शत्रुतापनः ॥ २८ ॥

आश्रमः क्षपणः क्षामः ज्ञानवान् अचलाचलः ।
प्रमाणभूतः दुर्ज्ञेयः सुपर्णो वायुवाहनः ॥ २९ ॥

धनुर्धरः धनुर्वेदः गुणराशिः गुणाकरः ।
अनन्तदृष्टिः आनन्दः दण्डः दमयिता दमः ॥ ३० ॥

ஸுலப4ঃ ஸுவ்ரதঃ ஶூரঃ வாங்மயைகநிதி4ர்நிதி4ঃ ।
வர்ணாஶ்ரமகு3ருர்வர்ணீ ஶத்ருஜித் ஶத்ருதாபநঃ ॥ 28 ॥

ஆஶ்ரமঃ க்ஷபணঃ க்ஷாமঃ க்ஞானவான் அசலாசலঃ ।
ப்ரமாணபூ4தঃ து3ர்க்ஞேயঃ ஸுபர்ணோ வாயுவாஹனঃ ॥ 29 ॥

த4னுர்த4ரঃ த4னுர்வேத3ঃ கு3ணராஶிঃ கு3ணாகரঃ ।
அனந்தத்3ருஷ்டிঃ ஆனந்த3ঃ த3ண்ட3ঃ த3மயிதா த3மঃ ॥ 30 ॥

28. *பக்தர்களுக்கு எளிதில் கிடைப்பவர், நல்ல நடத்தையுள்ள சூரியனின் வடிவானவர், சப்த சாஸ்த்ர (வியாகரணம்)த்திற்கு ஒரு பொக்கிஷ மானவர், யோகிகளால் மனதில் தியானம் செய்யப்படுபவர், வர்ணாஶ்ர மத்தை வகுத்தவர், பிரும்மசாரியின் வடிவமானவர், எதிரியை வென்று அவர்களை வாட்டுபவர்.*

29. *ஓய்விடம், பாபங்களை அழித்தவர், மெல்லியவர், மெய் அறிவுள்ளவர், ஸ்திரமான பர்வதங்களுக்கு உற்பத்தி ஸ்தானம், பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களுக்குக் காரணமானவர், எளிதில் அறிய முடியாதவர், கருடனின் உருவானவர், வாயுவை வாகனத்தின் படியாகக் கொண்டவர்*

30. *கையில் வில்லேந்தி வில் வித்தைக்கு உற்பத்தி ஸ்தானமானவர், நற்குணங்களின் கூட்டமானவர், யோகங்களின் உறைவிடம், கணக்கற்ற கண்களை உடையவர், ஆனந்தம், தண்டனை உருவில் உள்ளவர், துஷ்டர் களை அடக்குபவர், புலன்களின் அடக்குமுறையாக உள்ளவர்.*

अभिवाद्यो महाचार्यः विश्वकर्मा विशारदः ।
वीतरागो विनीतात्मा तपस्वी भतभावनः ॥ ३१ ॥

उन्मत्तवेषः प्रच्छन्नः जितकामोऽजितप्रियः ।
कल्याणप्रकृतिः कल्पः सर्वलोकप्रजापतिः ॥ ३२ ॥

तपस्वी तारको धीमान् प्रधानप्रभुः अव्ययः ।
लोकपालः अन्तर्हितात्मा कल्पादिः कमलेक्षणः ॥ ३३ ॥

அபி[4]வாத்[3]யோ மஹாசார்யஃ விஶ்வகர்மா விஶாரத[3]ஃ ।
வீதராகோ[3] வினீதாத்மா தபஸ்வீ ப[4]தபா[4]வனஃ ॥ 31 ॥

உன்மத்தவேஷஃ ப்ரச்ச[2]ன்னஃ ஜிதகாமோऽஜிதப்ரியஃ ।
கல்யாணப்ரக்ருதிஃ கல்பஃ ஸர்வலோகப்ரஜாபதிஃ ॥ 32 ॥

தபஸ்வீ தாரகோ தீ[4]மான் ப்ரதா[4]னப்ரபு[4]ஃ அவ்யயஃ ।
லோகபாலஃ அந்தர்ஹிதாத்மா கல்பாதி[3]ஃ கமலேக்ஷணஃ ॥ 33 ॥

31. துதி செய்யத் தகுந்தவர், பேராசிரியர்களுக்கு உற்பத்தி ஸ்தானமானவர், உலகத்தைச் செயலாகக் கொண்டவர், சரஸ்வதியின் காரணமானவர், பக்தர்களுக்கு உலக விஷயங்களில் ஆசையை ஒழிப்பவர், அடக்கமான சுபாவத்தை அளிப்பவர், தவத்தில் ஈடுபட்டவர், உயிரினத்தை ச்ருஷ்டி செய்பவர்.

32. பித்தன் வேடம் புனைந்ததனால் மறைக்கப்பட்ட உருவமுடையவர், காமனை வென்றவர், மகாவிஷ்ணுவை நேசிப்பவர், மங்களமான சுபாவ முள்ளவர், யாவருக்கும் முதல்வர், எல்லா உலகிலுமுள்ள ஜனங்களின் நாயகர்.

33. தவத்தையே செல்வமாகக் கொண்டு யாவரையும் மீட்கும் ஆற்றல் கொண்டவர், புத்தி சக்தி மிக்கவர், பிரகிருதியின் தலைவர், அழிவற்றவர், உலகைக் காப்பவர், மாயையினால் மறைக்கப்பட்ட ஆன்மாவின் உருவானவர், சாஸ்திரங்களுக்குக் காரணமானவர், பார்வையினாலேயே செல்வத்தை அடைபவர்.

वेदशास्त्रार्थतत्त्वज्ञः नियमो नियमाश्रयः।
चन्द्रः सूर्यः शनिः केतुः विरामो विद्रुमच्छविः ॥ ३४ ॥

भक्तिगम्यः परं ब्रह्म मृगबाणार्पणोऽनघः ।
अद्रिराजालयः कान्तः परमात्मा जगद्गुरुः ॥ ३५ ॥

सर्वकर्माचलः त्वष्टा मङ्गल्यो मङ्गलावृतः।
महातपाः दीर्घतपाः स्थविष्ठः स्थविरो ध्रुवः ॥ ३६ ॥

வேத$^{3}$ஶாஸ்த்ரார்த்த$^{2}$தத்வக்ஞ: நியமோ நியமாஶ்ரய: ।
சந்த்$^{3}$ர: ஸூர்ய: ஶனி: கேது: விராமோ வித்$^{3}$ருமச்ச$^{2}$வி: ॥ 34 ॥

ப$^{4}$க்திக$^{3}$ம்ய: பரம் ப்$^{3}$ரஹ்ம ம்ருக$^{3}$பா$^{3}$ணார்பணோऽனக$^{4}$: ।
அத்$^{3}$ரிராஜாலய: காந்த: பரமாத்மா ஜக$^{3}$த்$^{3}$கு$^{3}$ரு: ॥ 35 ॥

ஸர்வகர்மாசல: த்வஷ்டா மங்க$^{3}$ல்யோ மங்க$^{3}$லாவ்ருத: ।
மஹாதபா: தீ$^{3}$ர்க$^{3}$தபா: ஸ்த$^{2}$விஷ்ட$^{2}$: ஸ்த$^{2}$விரோ த்$^{4}$ருவ: ॥ 36 ॥

34. வேதம், சாஸ்திரம் இவற்றின் உட்கருத்தறிந்த முனிவர்களுக்குக் காரண மானவர், யோகத்தின் அஷ்டாங்கங்களில் ஒன்றான கட்டுப்பாடு *(நியமம்)* ஆனவர், இந்திரியங்களின் கட்டுப்பாடுகளுக்கு உறைவிடம், சந்திரர், சூரியர், சனி, கேது இவர்களின் உருவானவர், அழகிய புதனின் உருவான வர், பவழம் போன்ற சோபையுடைய செவ்வாய் உருக் கொண்டவர்.

35. பக்தியினால் அடையப் பெறுபவர், பரம்பொருள்மீது அம்பு எய்வது போல மனதைச் செலுத்த வைப்பவர், பாபங்களை நீக்குபவர், மேரு போன்ற மலைகளை இருப்பிடமாகக் கொண்டவர், பிரம்மனை தேரோட்டியாகக் கொண்டவர், எங்கும் பரவியுள்ள பரமாத்மா, உலகத்திற்கு நன்மை புகட்டுபவர்.

36. பூசை போன்ற எல்லாக் கர்மாக்களையும் குறைவின்றி இயக்குபவர், தேவ சிற்பியான விச்வகர்மாவின் உருவானவர், மங்களத்தைக் கொடுப்பதால் மங்களத்தால் சூழப்பட்டவர், பெருந்தவம் உடையவர், நீண்ட காலம் தவம் செய்பவர், மிகப் பெரும் *(ஸ்தூலமான)* பொருளானவர், முதியவர், நிலைத்திருப்பவர்.

अहः संवत्सरो व्याप्तिः प्रमाणं परमं तपः ।
संवत्सरकरो मन्त्रः प्रत्ययः सर्वदर्शनः ।। ३७ ।।

अजः सर्वेश्वरः स्निग्धः महारेता महाबलः ।
योगी योग्यो महारेताः सिद्धः सर्वादिः अग्निदः ।। ३८ ।।

वसुर्वसुमनाः सत्यः सर्वपापहरो हरः ।
अमृतः शाश्वतः शान्तः बाणहस्तः प्रतापवान् ।। ३९ ।।

அஹஃ ஸம்வத்ஸரோ வ்யாப்திஃ ப்ரமாணம் பரமம் தபஃ ।
ஸம்வத்ஸரகரோ மந்த்ரஃ ப்ரத்யயஃ ஸர்வத3ர்ஶனஃ ॥ 37 ॥

அஜஃ ஸர்வேஶ்வரஃ ஸ்நிக்3த4ஃ மஹாரேதா மஹாப3லஃ ।
யோகீ3 யோக்3யோ மஹாரேதாஃ ஸித்3த4ஃ ஸர்வாதி3ஃ அக்3னித3ஃ ॥ 38 ॥

வஸுர்வஸுமனாஃ ஸத்யஃ ஸர்வபாபஹரோ ஹரஃ ।
அம்ருதஃ ஶாஶ்வதஃ ஶாந்தஃ பா3ணஹஸ்தஃ ப்ரதாபவான் ॥ 39 ॥

37. *பகல் உரு ஆனவர், ஆண்டாக இருப்பவர், எங்கும் நிறைந்தவர், நித்திய மரியாதையின் உருவானவர், முக்தியாகிய செல்வத்தைத் தருபவர், ஸத்தியத்தின் உருவானவர், ஆண்டு முதலிய காலத்தைத் தோற்றுவிப்பவர், ரகஸியமாகக் கூறப்பட வேண்டிய சுய அனுபவ உருவானவர், உலகம் யாவும் தோன்றும் உருக் கொண்டவர்.*

38. *பிறப்பற்றவர், அனைவருக்கும் ஈசுவரர், பக்தரிடம் அன்பு கொண்டவர், பூசிக்கத்தக்க வீர்யமுள்ளவர் (ஊர்த்வரேதா), பெரும் வலிவுள்ளவர், என்றும் யோகத்துடன் கூடியவர், யோகத்திற்கு வேண்டிய சக்தி வாய்ந்தவர், பொன் நிறம் கொண்ட பூசிக்கத் தகுந்த வீர்யமுள்ளவர், எப்பொழுதும் நித்யமாக உள்ளவர், யாவற்றிற்கும் முதற் காரணமானவர், ஞானமாகிய அக்னியைக் கொடுப்பவர்.*

39. *எல்லா உயிரிலும் வஸிப்பவர், சிறந்த மனமுள்ளவர், உண்மையானவரும் எல்லாப் பாபங்களை நீக்குபவருமானவர், ஆச்சரியத்தைக் கொடுப்பவர், யக்ஞ்யமற்றவர், மோக்ஷ உருவாகி நிலைத்தவர், ஆனந்த் உருவானவர், கையில் அம்பு இருப்பதால் பிரதாபம் நிறைந்தவர்.*

कमण्डलुधरी धन्वी वेदाङ्गो वेदविन्मुनिः ।
भ्राजिष्णुर्भोजनं भोक्ता लोकनेता दुराधरः ॥ ४० ॥

अतीन्द्रियो महामायः सर्वावासः चतुष्पथः ।
कालयोगी महानादः महोत्साहो महाबलः ॥ ४१ ॥

महाबुद्धिः महावीर्यः भूतचारी पुरन्दरः ।
निशाचरः प्रेतचारिमहाशक्तिः महाद्युतिः ॥ ४२ ॥

கமண்ட3லுத4ரீ த4ன்வீ வேதா3ங்கோ3 வேத3வின்முனிః ।
ப்4ராஜிஷ்ணுர்போ4ஜனம் போ4க்தா லோகநேதா து3ராத4ரః ॥ 40 ॥

அதீந்த்3ரியோ மஹாமாயః ஸர்வாவாஸః சதுஷ்பத2ః ।
காலயோகீ3 மஹாநாத3ః மஹோத்ஸாஹோ மஹாப3லః ॥ 41 ॥

மஹாபு3த்3தி4ః மஹாவீர்யః பூ4தசாரீ புரந்த3ரః ।
நிஶாசரః ப்ரேதசாரிமஹாஶக்திః மஹாத்3யுதிః ॥ 42 ॥

40. கமண்டலம் தரிப்பவர், வில்லேந்தியவர், வேதத்தை அங்கமாக உடையவர், வேத ஞானத்தின் காரணமானவர், முனிவர், ஒளிப் பிழம்பாக இருப்பவர், போகப் பொருளானவர், உணவு உண்பவர், உலகத்தை ஆள்பவர், கஷ்டப்பட்டுக் கூட மனதில் நிலைநிறுத்த முடியாதவர்.

41. இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டவர், பெருமாயை உள்ளவர், யாவற்றிற்கும் இருப்பிடமானவர், தர்மம், அர்த்தம் முதலிய நான்கு வழிகளை வகுத்தவர், காலனை அவனது கடமையில் ஈடுபடுத்துபவர், அனாகத சப்தத்தின் காரணமானவர், பெரும் உற்சாகமுள்ளவர், பெரும் வலிமைக்குக் காரணமானவர்.

42. பெரும் புத்தியுள்ளவர், பெரும் வீர்யம் கொடுப்பவர், உயிரினங்களில் இயங்குபவர், திரிபுரத்தை அழித்தவர், காலாத்ரியில் விளையாடுபவர், சவத்தை வாகனமாகக் கொண்ட சாமுண்டா தேவியானவர், பேரொளி.

अनिर्देश्यवपुः श्रीमान् सर्वहार्यमितोगतिः ।
बहुश्रुतो बहुमयः नियतात्मा भवोद्भवः ॥ ४३ ॥

ओजस्तेजोद्युतिकरः नर्तकः सर्वकामकः ।
नृत्यप्रियः नृत्यनृत्यः प्रकाशात्मा प्रतापनः★ ॥ ४४ ॥

बुद्धः स्पष्टाक्षरो मन्त्रः सन्मानः सारसप्लवः ।
युगादिकृत् युगावर्तः गम्भीरो वृषवाहनः ॥ ४५ ॥

அநிர்தே3ஶ்யவபுः ஸ்ரீமான் ஸர்வஹார்யமிதோக3திः ।
ப3ஹுஶ்ருதோ ப3ஹுமயः நியதாத்மா ப4வோத்ப4வः ॥ 43 ॥

ஓஜஸ்தேஜோத்3யுதிகரः நர்தகः ஸர்வகாமகः ।
ந்ருத்யப்ரியः ந்ருத்யந்ருத்யः ப்ரகாஶாத்மா ப்ரதாபன்* ॥ 44 ॥

பு3த்3த4ः ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரः ஸன்மானः ஸாரஸப்லவः ।
யுகா3தி3க்ருத் யுகா3வர்த்தः க3ம்பீ4ரோ வ்ருஷவாஹனः ॥ 45 ॥

43. *எடுத்துச் சொல்ல முடியாத உருவமுள்ளவர், நித்திய செல்வம் வாய்ந்தவர், மகா காலனையும் மீறியவர், நல்வழியானவர், பல சாஸ்திரங்களுக்குக் காரணமானவர், ஏராளமான சுகம் வழங்குபவர், மனதைக் கட்டுப் படுத்தியவர்களின் ஆன்மாவானவர், உயிரினத்தின் உற்பத்தி ஸ்தானம்.*

44. *வலிவு, திறமை, ஒளி இவற்றைக் கொடுப்பவர், உலகை ஆட்டி வைப்பவர், உலகின் ஸ்ருஷ்டியை தன் ஆசையாகக் கொண்டவர், நாட்டியப் பிரியர், நாட்டியக் கலையைத் தோற்றியவர், ஒளிமயமான சரீரத்தினால் சூரிய வடிவானவர்.*

45. *ஸனகர் முதலிய மகரிஷிகளுக்குப் பெரும் பொருளை போதித்தவர், காயத்ரி போன்ற மந்திர வடிவினர், நல்லவருக்குப் பிரமாணமானவர், சம்சாரக் கடலில் தோணி போன்றவர், யுகம் முதலிய சிருஷ்டி செய்து யுகத்தைத் திருப்பித் திருப்பி அதனதன் காலத்தில் வரச் செய்பவர். மகா விஷ்ணுவினால்கூட ஆழம் காண முடியாதவர், தருமத்தை வாகனமாக உடையவர்.*

★ ப்ரகாஶகः प्रकाशकः என்று வேறு பாடமுண்டு

इष्टो विशिष्टः शिष्टेष्टः शरभः शरभो धनुः ।
अपां निधिः अधिष्ठानं विजयो जयकालवित् ॥ ४६ ॥

प्रतिष्ठितः प्रमाणज्ञः हिरण्यकवचो हरिः ।
विरोचनः सुरगणः विद्येशो विबुधाश्रयः ॥ ४७ ॥

बालरूपो बलोन्माथी विवर्तो गहनो गुरुः ।
करणं कारणं कर्ता सर्वबन्धविमोचनः ॥ ४८ ॥

இஷ்டோ விஶிஷ்டஃ ஶிஷ்டேஷ்டஃ ஶரப4ஃ ஶரபோ4 த4னுஃ ।
அபாம் நிதி4ஃ அதி4ஷ்டானம் விஜயோ ஜயகாலவித் ॥ 46 ॥

ப்ரதிஷ்டி2தஃ ப்ரமாணக்ஞஃ ஹிரண்யகவசோ ஹரிஃ ।
விரோசனஃ ஸுரக3ணஃ வித்3யேஶோ விபு3தா4ஶ்ரயஃ ॥ 47 ॥

பா3லரூபோ ப3லோன்மாதீ2 விவர்தோ க3ஹனோ கு3ருஃ ।
கரணம் காரணம் கர்த்தா ஸர்வப3ந்த4விமோசனஃ ॥ 48 ॥

46. எல்லோராலும் விரும்பப்படுகிறவர், எல்லோரையும் விடச் சிறந்தவர் ஆனதால் அறிவாளிகளால் விரும்பப்படுகிறவர், சரபம் என்ற பறவை உருவானவர், அம்புடன் கூடிய வில்லுருவானவர், கங்கை போன்ற தீர்த்தங்களுக்கு உறைவிடம், லிங்க சரீரத்தை அழிப்பவர், வெற்றி பெறும் காலம் அறிந்தவர்.

47. உலகை நிலைநிறுத்தியவர், பிரம்மாண்டம் முதலிய அளவுகளை அறிந்தவர், இரணிய கர்ப்பரின் வடிவானவர், பாபத்தைப் போக்குபவர், சிறப்பாக ஒளிர்பவர், தேவர் கூட்டத்துடன் கூடியவர், அறிவின் தலைவர், அறிவாளிகளுக்குப் புகலிடம்.

48. சிறுவனின் உருவில் தோன்றியவர், அசுர சேனையை அழிப்பவர், மாயையினால் உலகத்தில் பிரமையை உண்டு பண்ணுபவர், நாமே அறிய முடியாததால் குருவின் உருவில் தோன்றியவர், மனத்தின் உருவானவர், துணைக் காரணமான புத்தி உருவானவர், யாவற்றையும் உண்டு செய்யும் அகங்கார வடிவினர், எல்லாப் பந்தங்களிலிருந்தும் விடுவிப்பவர்.

विद्वत्तमो वीतभयः विश्वभर्ता निशाकरः ।
व्यवसायो व्यवस्थानः स्थानदो जगदादिजः ॥ ४९ ॥

दुन्दुभो ललितो विश्वः भवात्मा आत्मनि संस्थितः ।
वीरेश्वरो वीरभद्रः वीरहा वीरभृद्-विराट् ॥ ५० ॥

वीरचूडामणिर्वेत्ता तीव्रनादो नदीधरः ।
आज्ञाधारः त्रिशूली च शिपिविष्टः शिवालयः ॥ ५१ ॥

வித்$^3$வத்தமோ வீதப$^4$யஃ விஶ்வப$^4$ர்த்தா நிஶாகரஃ ।
வ்யவஸாயோ வ்யவஸ்தானஃ ஸ்தா$^2$நதோ$^3$ ஜக$^3$தா$^3$தி$^3$ஜஃ ॥ 49 ॥

து$^3$ந்து$^3$போ$^4$ லலிதோ விஶ்வஃ ப$^4$வாத்மா ஆத்மனி ஸம்ஸ்தி$^2$தஃ ।
வீரேஶ்வரோ வீரப$^4$த்$^3$ரஃ வீரஹா வீரப்$^4$ருத்-விராட் ॥ 50 ॥

வீரசூடா$^3$மணிர்வேத்தா தீவ்ரநாதோ$^3$ நதீ$^3$த$^4$ரஃ ।
ஆக்ஞாதா$^4$ரஃ த்ரிஶூலி ச ஶிபிவிஷ்டஃ ஶிவாலயஃ ॥ 51 ॥

49. *அறிவாளிகளில் சிறந்தவரானதால் பயத்தை நீக்குபவர், உலகைப் போஷிப்பவர், பிரளயமாகிய இருளைத் தோற்றி வைப்பவர், தத்துவத்தை நிச்சயிக்கும் ஆற்றல் அளிப்பவர், மறுபடி சன்மம் இல்லாமல் செய்பவர், உயர்ந்த ஸ்தானம் அளிப்பவர், உலகத்தின் பெரியோர்களுக்குக் காரணமானவர்.*

50. *அசுரர்களின் வடிவானவர், மிக்க அழகானவர், அனைத்துமானவர், பஞ்ச பூதங்களாலான தேகங்களின் உள்ளே அந்தர்யாமியாக இருப்பவர், வீரர்களின் தலைவரான வீரபத்திரர், (அரக்க குணம் படைத்த) வீரர்களை அழிப்பவர், வீரர்களுக்கெல்லாம் அரசன்.*

51. *வீரர்களுக்குத் தலையணி போன்றவர், யாவும் அறிந்தவர், சிறந்த சத்தத்தை உண்டு பண்ணுபவர், கடல் போன்றவர், மீற முடியாத ஆணையிடுபவர், திரிசூலம் தாங்கியவர், ஒளிக் கதிர்களில் தங்குபவர், பார்வதியின் உறைவிடம்.*

वालखिल्यो महाचापः तिग्मांशु र्निधिरव्ययः ।
अभिरामः सुशरणः सुब्रह्मण्यः सुधापतिः ॥ ५२ ॥

मघवान् कौशिको गोमान् विश्राम सर्वशासनः ।
ललाटाक्षो विश्वदेहः सारः संसारचक्रभृत् ॥ ५३ ॥

अमोघदण्डी मध्यस्थःहिरण्यो ब्रह्मवर्चसी ।
परमार्थःपरमयः शम्बरो व्याघ्रकोनलः ॥ ५४ ॥

வாலகி[2]ல்யோ மஹாசாபஃ திக்[3]மாம்ஶுர்நிதி[4]ரவ்யயஃ ।
அபி[4]ராமஃ ஸுஶரணஃ ஸுப்[3]ரஹ்மண்யஃ ஸுதா[4]பதிஃ ॥ 52 ॥

மக[4]வான் கௌஶிகோ கோ[3]மான் விஶ்ராம ஸர்வஶாஸனஃ ।
லலாடாக்ஷோ விஶ்வதே[3]ஹஃ ஸாரஃ ஸம்ஸாரசக்ரப்[4]ருத் ॥ 53 ॥

அமோக[4]த[3]ண்டீ[3] மத்[4]யஸ்த[2]ஃஹிரண்யோ ப்[3]ரஹ்மவர்சஸீ ।
பரமார்த்த[2]ஃபரமயஃ ஶம்ப[3]ரோ வ்யாக்[4]ரகோநலஃ ॥ 54 ॥

52. சூரியனின் ரதத்திற்கு முன் செல்லும் வாலகில்யர் என்ற ரிஷியின் உருவானவர், பெரும் வில்லை உடையவர், சூரியனின் உருவானவர், அழிவற்ற செல்வம் உடையவர், யோகிகளுக்கு ஆனந்தமளிப்பவர், யாவரின் பலத்தையும் நீக்குபவர், தலம் வேதம் ஸத்யம் ஞானம் இவைகளுக்கு நன்மை அளிப்பவர், அமுதின் தலைவர்.

53. கௌசிகன் எனப்படும் இந்திரன் உருவானவர், பசு உருக் கொண்ட உலகத்தின் உருவானவர், பிறப்பு இறப்பு முதலிய கஷ்டங்களிலிருந்து விடுதலை அளிப்பவர், யாவரையும் அடக்குபவர், நெற்றிக் கண்ணர், உலகத்தையே உடலாகக் கொண்டவர், பிரளய காலத்திலும் ஸ்திரமாக இருப்பவர், எல்லாப் பிரபஞ்சத்தையும் போஷிப்பவர்.

54. வீண் போகாத தண்டனையளிப்பவர், நடுநிலையிலுள்ளவர், பொன்னுருவானவர், தவத்தினால் பிரகாசிப்பவர், பெரும் பொருள் *(மோக்ஷம்)* ஆனவர், பூர்ண ஆனந்த ரூபமானவர், மங்களத்தைத் தருபவர் *(தண்ணீரின் உருவானவர்)*, வியாக்ரன் என்ற அசுரனை அழித்தவர், அக்னி உருவானவர்.

रुचिर्वररुचिर्वन्द्यो वाचस्पतिः अहर्पतिः ।
रविर्विरोचनः स्कन्धः शास्ता वैवस्वतोऽजनः ॥ ५५ ॥

युक्तिः उन्नतकीर्तिश्च शान्तरागः पराजयः ।
कैलासपतिकामारिः सविता रविलोचनः ॥ ५६ ॥

विद्वत्तमो वीतभयः विश्वहर्तानिवारितः ।
नित्यः नियतकल्याणः पुण्यश्रवण कीर्तनः ॥ ५७ ॥

ருசிர்வரருசிர்வந்த்[3]யோ வாசஸ்பதிঃ அஹர்பதிঃ ।
ரவிர்விரோசனঃ ஸ்கந்த[4]ঃ ஶாஸ்தா வைவஸ்தோ஽ஜனঃ ॥ 55 ॥

யுக்திঃ உன்னதகீர்தீஶ்சச ஶாந்தராக[3]ঃ பராஜயঃ ।
கைலாஸபதிகாமாரிঃ ஸவிதா ரவிலோசனঃ ॥ 56 ॥

வித்[3]வத்தமோ வீதப[4]யঃ விஶ்வஹர்தாநிவாரிதঃ ।
நித்யঃ நியதகல்யாணঃ புண்யஶ்ரவண கீர்த்தனঃ ॥ 57 ॥

55. *ஒளியின் உருவானவர், சிறந்த ஒளி கொடுப்பவர், வணங்கத் தகுந்தவர், வித்யையின் அதிபர், பகலின் அதிபர் (சூரியன்), பிரம்மாண்டத்திற்கு ஒளி தரும் சூரிய வடிவானவர், சமூகத்தின் உருவானவர், யாவரையும் ஆளும் யமன் உருவானவர், பிறப்பற்றவர்.*

56. *சமாதி நிலையின் உருவானவர், சிறந்த கீர்த்தி தருபவர், ஆசையற்றவர்களால் விரும்பப்படுபவர், எல்லோரையும் தோற்கடிப்பவர், கைலாய நாதனாகி மன்மதனின் எதிரியானவர். உலகின் உறபத்தி ஸ்தானம், சூரியனைக் கண்ணாகக் கொண்டவர்.*

57. *அறிவாளிகளால் எதிர்பார்க்கப்படுகிறவர், எல்லாவிடத்திலும் பயத்துடன் பார்க்கப்படுபவர், உலகத்தை அழிக்குங்கால் ஒருவராலும் தடுக்கப்படாதவர், அழிவற்றவர், இடைவிடாமல் மங்களத்தை வழங்குபவர், தன் புகழ் பாடுபவனுக்கும் கேட்பவனுக்கும் புண்ணியம் தருபவர்.*

दूरश्रवाः विश्वसहः ध्येयो दुःस्वप्ननाशनः ।
उत्तारको दुष्कृतिहा दुर्धर्षो दुःसहोऽभयः ॥ ५८ ॥

अनादिर्भूर्भुवो लक्ष्मीः किरीटित्रिदशाधिपः ।
विश्वगोप्ता विश्वभर्ता सुधीरो रुचिराङ्गदः ॥ ५९ ॥

जननो जनजन्मादिः प्रीतिमान् नीतिमान् नयः ।
विशिष्टः काश्यपो भानुः भीमो भीमपराक्रमः ॥ ६० ॥

தூ3ரஶ்ரவாஃ விஶ்வஸஹஃ த்4யேயோ து3ஸ்வப்னநாஶனஃ ।
உத்தாரகோ து3ஷ்க்ருதிஹா து3ர்த்4ஷோ து3ஃஸஹோऽப4யஃ ॥ 58 ॥

அநாதி3ர்பூ4ர்பு4வோ லக்ஷ்மீஃ கிரீடித்ரித3ஶாதி4பஃ ।
விஶ்வகோ3ப்தா விஶ்வப4ர்தா ஸுதீ4ரோ ருசிராங்க3த3ஃ ॥ 59 ॥

ஜனனோ ஜனஜன்மாதி3ஃ ப்ரீதிமான் நீதிமான் நயஃ ।
விஶிஷ்டஃ காஶ்யபோ பா4னுஃ பீ4மோ பீ4மபராக்ரமஃ ॥ 60 ॥

58. தூர தேசங்களிலும் கேட்கப்படுகிறவர், உலகைத் தாங்குபவர், தியானம் செய்யத் தகுந்தவர், கெட்ட கனவுகளைப் போக்குபவர், சம்ஸாரக் கடலின் கரை சேர்ப்பவர், கெட்டவர்களை நாசம் செய்பவர், முற்றுகையிடப்பட முடியாதவர், அசுரர்களால் சகித்துக் கொள்ள முடியாதவர், பயத்தை நீக்குபவர்.

59. பிறப்பற்றவர், பூமியின் உருவினர், பூமிக்குச் சோபை தருபவர், முக்கியமான தேவர்களின் தலைவர், உலகைக் காப்பவர், உலகைப் போஷிப்பவர், நன்கு பயமற்றவர், அழகிய தோள் வளைகளுள்ளவர்.

60. உலகை சிருஷ்டி செய்தவர், மக்களின் பிறப்பு முதலியவற்றிற்குக் காரணமானவர், நேசிப்பவர், நீதியுடன் நடப்பவர், *(நீதி)* நியாயம் உருவானவர், பிரளய காலத்திலும் அழிவற்றவர், கச்யபரின் புதல்வர், சூரிய உருவினர், பயமுறுத்துபவர், சிறந்த பராக்ரமங்களை அளிப்பவர்.

प्रणवः सप्तधाचारः महाकायो महाधनुः ।
जन्माधिपो महादेवः सकलागमपारगः ॥ ६१ ॥

तत्त्वातत्त्वविवेकात्मा विभूष्णुः भूतिभूषणः ।
ऋषिः ब्राह्मणवित् जिष्णुः जन्ममृत्युजरातिगः ॥ ६२ ॥

यज्ञो यज्ञपतिर्यज्वा यज्ञान्तोमोघविक्रमः ।
महेन्द्रः दुर्भरः सेनी यज्ञाङ्गो यज्ञवाहनः ॥ ६३ ॥

ப்ரணவஃ ஸப்ததா$^4$சாரஃ மஹாகாயோ மஹாத$^4$னுஃ ।
ஜன்மாதி$^4$போ மஹாதே$^3$வஃ ஸகலாக$^3$மபாரக$^3$ஃ ॥ 61 ॥

தத்வாதத்வவிவேகாத்மா விபூ$^4$ஷ்ணுஃ பூ$^4$திபூ$^4$ஷணஃ ।
ருஷிஃ ப்$^3$ராஹ்மணவித் ஜிஷ்ணுஃ ஜன்மம்ருத்யுஜராதிக$^3$ஃ ॥ 62 ॥

யக்ஞோ யக்ஞபதிர்யஜ்வா யக்ஞான்தோமோக$^4$விக்ரமஃ ।
மஹேந்த்$^3$ரஃ து$^3$ர்ப$^4$ரஃ ஸேனீ யக்ஞாங்கோ$^3$ யக்ஞவாஹனஃ ॥ 63 ॥

61. ஓங்காரமானவர், ஏழு வகை வாயுவின் உருவில் சஞ்சரிப்பவர், பெரும் உருவத்துடன் பெரும் வில்லேந்தியவர், சிருஷ்டியின் தலைவர், தேவர்களை வணங்கத் தக்கவர்களாக செய்தவர், எல்லா வேதங்களிலும் கரை கடந்தவர்.

62. உண்மையான மூல தத்துவப் பொருள், உண்மையான பொருள் இவை களின் பாகுபாடு செய்வதையே தன்னுருவாகக் கொண்டவர், எல்லா இடத்திலும் இருப்பவர், அணிமா முதலிய யோக சித்திகளை அணி கலமாகக் கொண்டவர், புலன்களுக்கு அப்பாற்பட்டதை உணர்த்துபவர், பிராம்மணர்களுக்கு (பரம்பொருளை உபாஸிப்பவர்கட்கு) ஞானத்தையும் வெற்றியையும் அளிப்பவர், பிறப்பு இறப்பு மூப்பு நிலைகளைக் கடந்தவர்.

63. வேள்வியின் உருவாகி வேள்வியின் தலைவனாகியிருப்பவர், வேள்வி புரிபவரின் உருவுமானவர், வேள்வியை நிறைவேற்றுபவர், வீண் போகாத பராக்ரமமுள்ளவர், பரமேச்வரர், மனதில் நிலைநிறுத்த முடியாதவர், பிரமதர்களின் படையுடையவர், யாகத்தை உறுப்பாகக் கொண்டவர், யாகத்தின் மூலம் அடையப்படுபவர்.

